29th April 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த மாதிரி வந்தால், அதில் தனிப்பட்டவர்கள் என்றோ, முனிசிபாலிட்டிகள் என்றோ பாகுபாடு செய்ய முடியாது. தீ விபத்து என்பது திடீரென்று ஏற்படக்கூடியது. அதற்காக முனிசிபாலிட்டிகளுக்குத்தான் கொடுக்கவேண்டுமென்பதில்லை.

SRI A. A. RASHEED: Was the fire accident due to sabotage?

THE HON. SRI M A. MANICKAVELU: It does not look like that. I said the cause is not yet known.

SRI V. S. MANICKASUNDARAM : ஈரோடு முனிசிபாலிட்டியார், இதில் நஷ்டமடைந்தவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று கேட்டு அரசாங்கத்திற்கு தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறார்களா? அப்படியென்றால் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON SRI M. A. MANICKAVELU: தீர்மானம் அரசாங்கத்திற்கு வந்திருக்கலாம். ஆனால் அதைப்பற்றி இப்போது என்னிடம் தகவல் இல்லை. இந்த தீ விபத்து சம்பந்தமாக விசாரணை நடந்து கொண்டிருக்கிறது. இது முடிந்த பின்னால் எவ்விதமெல்லாம் முடிவு எடுக்கவேண்டுமோ அதன்படி அரசாங்கம் தக்க முடிவுகளை செய்யும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Customs treasury in Thopputhurai*

* 881 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி தாலுகாவில் தோப்புத்துறையில் உள்ள கஸ்டம்ஸ் டிரஷரியை அரசாங்கம் மூடப்போகிறார்களா ?

(ஆ) அப்படியாயின் எப்போது, ஏன்?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) & (b) Thopputhurai is a minor port which is proposed to be closed due to want of trade. A final decision has not yet been taken regarding the date on which the minor port is to be closed. When the port is closed, the Government of India will be closing the Customs Treasury at that place. The State Government are however considering the opening of a Sub-Treasury at Vedaranyam to meet the needs of the people of locality.

SRI A. VEDARATHNAM : இந்தப் 'போர்டை' மூடக் கூடாது என்று அரசாங்கத்திற்கு ஏதேனும் கோரிக்கை வந்திருக்கிறதா? அப்படியானால் அது பரிசீலிக்கப்பட்டு அதன் பேரில் முடிவெடுக்கப்பட்டு விட்டதா? முடிவு எடுக்கப்படவில்லையானால், முடிவுக்கு வர அரசாங்கத்திற்கு எவ்வளவு காலம் பிடிக்கும்?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரியான கோரிக்கை எதுவும் வந்ததாக என்னிடம் தகவல் இல்லை. 'Thopputhurai is a minor port which is proposed to be closed due to want of trade' என்று மூலக் கேள்விக்கு

[29th April 1960

அளித்த பதிலில் நான் சொன்னேன். எனவே 'ட்ரேட்' இல்லாத போது அந்தப் 'போர்டை' எப்படி நடத்தமுடியும் என்று எனக்குத் தெரியவில்லை.

*Payment of salary to teachers in Girls' High School, Lalgudi*

* 882 Q.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state the reasons for the non-payment of arrears of salary to teachers in Girls' High School, Lalgudi, from October 1959?

THE HON. SRI C. SUBRAMANIAM: No information is available with the Government. A report has been called for.

*Adult education centes*

* 883 Q.—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) முதியோர் கல்வி பள்ளிகளுக்கு சம்பளம் சரிவர பட்டுவாடாகி வருகிறதா?

(ஆ) இல்லையானால், எவ்வளவு காலமாக கொடுக்கப்படவில்லை. ஏன்?

(இ) இக்காரணத்திற்காக அப்பள்ளிகள் ஏதேனும் மூடப்பட்டிருக்கின்றனவா?

(ஈ) இவைகள் சரிவர நடைபெற அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Yes, Sir, payments are being made regularly to Adult Literacy Schools recognised by the Department.

(*b*) & (*c*) Do not arise.

(*d*) These schools are inspected annually by the Deputy Inspector of Schools. Besides, they are also visited by the officials of the Development Blocks concerned.

SRI A. VEDARATHNAM: இவ்வாறு இவைகளைப் பரிசீலனை செய்த அதிகாரிகளின் ரிப்போர்ட் அரசாங்கத்திற்கு வந்திருக்கிறதா? அந்தப் பள்ளிகள் நல்லமுறையில் நடப்பதாக அரசாங்கம் கருதுகிறதா? இல்லையானால், இவைகளைத் தொடர்ந்து நடத்த வேண்டியது அவசியமா என்று அரசாங்கம் ஆலோசிக்குமா?

THE HON. SRI. C. SUBRAMANIAM: அவை மோசமாக இருப்பதாக இதுவரையிலும் ரிப்போர்ட் வரவில்லை.

SRI S. NAGARAJA MONIGAR: இந்த முதியோர் பள்ளிகளை, இருக்கும் ஒன்றிரண்டையும் மூடும் நிலைக்கு வருவதைவிட, நான் நேற்று கூறியதுபோல இவைகளை முன்னேற்றமடையச் செய்யும்